[27th September 1958

*Touring cinemas*

* 564 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of appeals filed before the Board of Revenue (Land Revenue) under the Madras Cinemas (Regulation) Act, 1955, during the year 1957–58 against the grant of licences to run touring cinemas issued by the District Collectors;

(*b*) whether new entrants are encouraged under the Act and rules;

(*c*) whether any lacuna has been pointed out in the rules by the High Court in the matter of granting licence; and

(*d*) whether the Government propose to amend the rules accordingly?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 47.

(*b*) Yes, Sir.

(*c*) No, Sir.

(*d*) Does not arise.

SRI S. LAZAR : புதியதாக லைசென்ஸ் வாங்குகிறவர்களுக்கும் அனுமதி கொடுக்கப்படுவதாக சொல்லப்பட்டது. அனுபவம் உள்ளவர் களுக்கு பிரையாரிடி கொடுக்க வேண்டுமென்ற சட்டம் அமுலில் இருக் கிறது. அதை மாற்றுவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அனுபவம் உள்ளவர் களுக்கு கொடுப்பது என்பதும் ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம்தான்.

SRI A. V. P. ASAITHAMBI : சினிமா தியேட்டர்களை தேசீயமாக்குவ தற்கு அரசாங்கத்தினிடம் திட்டம் இருக்கிறதா ? இல்லையென்றால், அப்படி ஒரு திட்டம் கொண்டுவர அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்பேர்ப்பட்ட உத்தேசம் ஒன்றும் இல்லை.

SRI S. LAZAR : இது விஷயம், லைசென்ஸ் அதிகாரிகளுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறதா ? அப்படியில்லையென்றால், இனிமேலாவது அறி விக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏதாவது அறிவிக்க வேண்டும் என்று ஏற்பட்டால், அது கவனிக்கப்படும்.

*Teaching of Gandhiji's Principles*

* 565 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) (i) பள்ளி மாணவர்களுக்கு காந்தியடிகளின் சிறந்த தத்துவங் களைப் போதிக்க ஏதேனும் வகை செய்திருக்கிறார்களா ?

(ii) அப்படியானால் அதன் விபரமென்ன ?

(ஆ) (i) மத்திய அரசாங்கம் இவ்விஷயமாய் ஏதேனும் இந்த அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறியதா ?

(ii) அப்படியானால் அதன் விபரமென்ன ?